REGD No. M. 4652

# திராவிடநாடு

இலங்கை 15 சதம் | விலை அணா 2

மலர் 9 | 15—4—51 | இதழ் 43

T. N. Paranguse
News Agent
Kulitalai

## ★ ஐக்கிய ஆலாபனம்! ★

"பத்து வருஷத்துக்கு முன்பு! பெயர்தான் எனக்குப் பர்வதம், பார்த்தால் சிறு குச்சிபோல இருப்பேன். ஒட்டக உருவம்! சிவிங்கிக் கழுத்து! ஒடிந்து விழும் உடல்! ஒல்லிக் கம்பி! என்றெல்லாம், சொல்வர், என்னைக் கண்டதும். ஆனால் இப்போது என்னைப் பாருங்கள். பர்வதம் என்றால் எனக்குப் பொருத்தமான பெயர் என்று சொல்வீர்கள்! என் கனத்த உடலும், பெருத்த தொந்தியும் உரல் போன்ற காலும், மத்தளக் கழுத்தும், மதயானைக் கைகளும் எவருக்குத் தான் உண்டு?" என்று, மலை போல் பெருத்த மாதொருத்தி கூறினால், கெக்கலிப்பர், கேட்போர்! முன்பு ஒல்லியாக இருந்தவளாம்—இப்போது ஊதி பெருத்தது போல, பலூனுக்கு காற்று அடைத்தது போல, பர்வதமாகிவிட்டாள்! நடந்தால் பெரிய தேர் அசைவது ஞாபகம் வருகிறது. உட்காரும்போதோ, யானை திண்டாடுமே, அதுபோல அவதிப்படுகிறாள். படுத்தாலோ, பாராங்கல்தான்! பரிதாபம் வருகிறது நமக்கு. ஆசைப் முடியவில்லை, சமயலறைக்குச் சென்று சாதம் கொண்டுவா, என்றால் தடுமாறுகிறாள். தண்ணீர் கொண்டுவாச் சென்றாலோ குனிய முடியவில்லை—நிமிர முடியவில்லை! கண்ருவிக் காட்சி, வருத்தம்வருகிறது நமக்கு. ஆனால், அவளோ, நான் பர்வதமாகி விட்டேன் என்று பீத்திக்கொள்கிறாள், பாவம் ஒன்றுந்தெரியாதவள் என்று அவள் வார்த்தை கேட்போர் அனுதாபப்படுவர்.

சகஜம், இது. பெருத்த தொந்தியும் கனத்த உடலும் கொண்டோர் படும் கஷ்டம் பலருக்குத் தெரிந்த விஷயம் — புரிந்த சங்கதி ஆனால், அதே மாது பத்து ஆண்டுகளுக்கு முன்னிருந்த பாலப் பருவத்தையும் பால்வதனத்தையும் பசுமை மாறா இளமையையும் இழித்துக்கூறி 'இப்போதென்னைப்பார்! இமயம், எது நீசொல்' என்று பேசினால், அவள் மீது அனுதாபமே பிறக்கும், பிறருக்கு.

"வீணாகப்பிதற்றுகிறாள்! வீம்புக்காரி! நான்படும் கஷ்டம் எனக்கல்லவோ தெரியும். சனியனைப் பிடித்துத்தலையில் கட்டினரே!" என்றே, சஞ்சலப்படுவான், பர்வதத்தை மனைவியாகக்கொண்டவன் — வேதனையை அனுபவிப்பவன்.

X X X

வேதனையை அனுபவிப்பவனிடம், வேல்விழியாளைக் காட்டி, பிறகு, இருந்தாலும் உனக்கிவள்தான் ஏற்றவள், 'பெரிய மனுஷி'யின் புருடன் என்று பிறர் சொல்லக்கேட்பது எவ்வளவு பெருமைக்குரியது தெரியுமோ, என்று கேட்பதுபோல, அண்மையில் சென்னைக்கு வந்து திரும்பிய இந்திய குடியரசுத்தலைவர் ராசேந்திரர், சரித்திரத்தைச் சான்றுக்கிழுத்து, சரிந்துபோன சாம்ராஜ்யங்களின் பெயரைக் கவனமூட்டி, இந்தியாவின் நிலை குறித்து சில கூறியுள்ளார் — கூறியுள்ளார் என்பதைவிட, கொட்டினர் முரசு!—என்றும் கூறலாம். அவ்வளவு பெருமிதத்தோடு பேசியிருக்கிறார்.

"இப்போதுபோல எப்போதும் ஒரே அரசாங்கம் இருந்ததில்லை. சாம்ராஜ்யாதிபதிகளும் சக்கரவர்த்திகளும் முன்பு இருந்திருக்கின்றனர். எனினும், இப்போதுபோல ஒரே ஆட்சி எப்போதும் இருந்ததில்லை.

நாடு முழுவதையும் கட்டுப்படுத்தக் கூடிய ஒரே சட்டத்தையும் நாம் பெற்றிருக்கிறோம்."

சென்னை, கார்ப்பரேஷன் வரவேற்புக்கு—மக்கள் வரவேற்பல்ல! மேயரின் வரவேற்பு அது. ஆகவே, தான் 14 லட்சம் பேர் கொண்ட சென்னை மக்களில் 4 ஆயிரம் பேரே, ஸ்டேடியத்துக்குள் அனுமதிக்கப்பட்டனர் அதுவும், போலீஸ் பாராவுடன்! — பதிலளிக்கையில், இவ்விதம் கூறியிருக்கிறார். அதோடு, தேசத்தின் ஐக்கியம் சீர்குலைக்காமல் காப்பது நமது கடன், என்கிற திருப்பாராயணத்தையும் செய்யத் தவறவில்லை!

"பிளவு மனப்பான்மையை நாம் முளையிலேயே கிள்ளி எறியவேண்டும். பிரிந்து போக வேண்டும் என்கிற மனோ பாவத்தை எப்படியாவது தடுத்து நிறுத்த வேண்டும்"

கவனித்தீர்களா? எப்படியாவது, தடுத்து நிறுத்த வேண்டுமாம்! குடியரசுத் தலைவர், அவர். அவர் இந்த பீடத்தில் அமரும் முன்பே, நாம அறிவோம் அவரைப்பற்றி. சத்ய சந்தர், சமாதானப் பிரியர், சாந்த சீலர், காந்தியின் சீடர்—என்றெல்லாம் பலப் பலச் சொல்வர். அத்தகைய, நல்லவர், கடந்த முறை சென்னைக்கு— அன்பர் ஆச்சாரியாரோடு—வந்தபோது, கடற்கரைக் கூட்டத்தில் பட்ட பாட்டைக் கேட்டபோது பரிதாபமே பட்டோம்! காரணம், சோரதரோடு சேர்ந்து 'கல்லுக்கும் மண்ணுக்கும்' வேலை தந்தாரே, இத்தகைய நல்லவருக்கா இந்தப் பரிசு, என்ற வேதனையால். அந்த வேதனை நிலையை மீண்டும் நினைப்பூட்டுவதுபோல, தலைவராஹுலும் இன்னும் என்னைச் சுற்றி 'எருக்கம் பூக்கள்' உள்ளன, அதன் மணம் இது பாரீர்! என்று எடுத்துக் கூறுவதுபோல, பேசியிருக்கிறார்.

முளையிலேயே கிள்ளி எறிய வேண்டுமாம்!

இதை, அவர் வெளியிடும்போது மேலும் ஒன்று குறிப்பிட்டிருக்கிறார். நாம் இப்போது, சரித்திரத்தை ஆதாரங்காட்டி கூறுகிறோமல்லவா, தென்னாடு எப்போதும் அடிமைப்பட்டுக்கிடந்ததில்லை; அக்பர் ஆட்சியும், அவுரங்கசீப் படையும், கனிஷ்கர் போர் முரசும் இங்கு தலை காட்டியதில்லை, என்றெல்லாம், அதைக் கவனத்தில் வைத்துக்கொண்டோ என்னவோ,

'சரித்திரத்தைக் காட்டி முன்பு அப்படி இருந்தது என்று கூறப்படுவதினின்றும் நாம் காத்துக்கொள்ள வேண்டும். மத்திய சர்க்காரிடமிருந்து பிரியவேண்டும் என்ற மனோபாவத்தைத்தடுக்கவேண்டும்." என்றும், குறிப்பிட்டிருக்கிறார்.

இத்தனையையும் அவர் கூறியதற்குக் காரணம்,

"நாட்டின் ஐக்கியம் சிர்குலையாமல் பேணி வளர்க்கப்பட வேண்டும்"

என்பதற்காகத்தான். ஐக்கியம் சிர்குலையாமல் வளர்க்கப்படவேண்டுமாம் — சரித்திர காலத்தில் கூட இல்லாத சாம்ராஜ்யத்தை நிர்மாணித்து விட்டோம் என்று முழக்கமிட்ட குடியரசுத் தலைவர், அந்தகைய "பெரும் வெற்றி" நீடிக்கவேண்டும் என்று ஆசைப்படுகிறார்.

அவருக்கு மட்டுமல்ல, தேசியத் திருவாளர்களுக்குமே, இன்று நமது கோரிக்கையைக் கேட்கும்போது, கூடாது என்று கூறுவதற்குக் கிடைத்துள்ள வார்த்தை 'ஐக்கியம்' தான்.

'ஐக்கியத்தை உடைப்பதா, சிர்குலைந்துபோவதா, இந்தியா பற்பல துண்டுகளாவதா?' என்று, வேதனையோடு பேசுகிறார்கள்,

இந்த வேதனைக் குரல், பாகிஸ்தான் கேட்டு ஜின்னா பரணி பாடிய போது, எழும்பத்தான் செய்தது! முதலில் திட்டினர், பிறகு, பலம் பாகிஸ்தான் பக்கம் சேருகிறது என்று கண்டதும் 'ஐயோ, பாரத மாதா'வா பிற்போ என்று பதறினர், 'பசுவல்லவோ — அதையா துண்டு போடுவது' என்று கூறினர் — இத்தனை பரிதாபக் குரலும், மக்களுடைய உள்ளத்தைத் தூண்டிவிட்டு பாகிஸ்தானை எதிர்க்கக் கிளப்பவேண்டுமே என்ற ஆசையால் அடிக்கடி ஒலித்தது. ஆனாலும், பாகிஸ்தான் பகற் கனவாகவில்லை!

இந்தக் காட்சியைக் கண்முன்னே, கண்டோர்தாம் நாம்.

எனினும், தேசியக் திருவாளர்களும் அவர்தம் திரு ஏடுகளும், 'ஐக்கியம்' என்கிற தெம்மாங்கைத் திருப்பித் திருப்பிப் பாடிக் காட்டுகின்றன — கொள்ளைக் காட்டு நரி பல்லைக் காட்டுவதுபோல!

ஐக்கியம்!

ஒற்றுமை!!

இந்த இரண்டு வார்த்தைகளும் ஒரே பொருளைக் காட்டுவதுபோல தோன்றினும், இரண்டிற்கும் வேறு பொருளும் உண்டு.

'அப்பா! தம்பி, அழகான மனைவி, ஜோரான வீடு எல்லாம் தருகிறேன். போகாதே, குடும்ப ஐக்கியத்தைக் குலைக்காதே' என்று கூறுகிறார், வாலிப வயதுள்ளவனைப் பார்த்து, குடும்பப் பொறுப்பை ஏற்று நடத்தி வரும், கோடீசுவரர். பெயர் மட்டு மல்ல, அவர் ஒரு கோடீசுவரர்தான். ஆனால், அவ்வளவு பணமும் எப்படி வந்தது என்பதனை உணர்ந்ததாலேயே, அவரைவிட்டு விலக விரும்புகிறான், பையன். விலகினால் தானுண்டு தன் பொருளுண்டு என்று வாழலாம், என்ற ஆசை அவனுக்கு

ஆனல், அவன் விலகுவதோ: கோடீசுவரருக்குப் பெரும் நஷ்டம்!

பிள்ளை போய்விட்டானே! என்பதல்ல, ஏனெனில் பிள்ளையின் சொந்த தகப்பனர் அவரல்ல! பிள்ளைக்கு 'கார்டியனக' நியமிக்கப் பட்டவர் கூட அல்ல. வாலிபன் சிறுவனாக இருக்கும்போது, அவன் குடும்பப் பாரத்தை, தெகிடு தத்தமாக, தம் வசப்படுத்தியவர்— அதன் மூலம் கோடீசுவரர் ஆகியவர்! எனவே, அவன்விலகக் கூடாது என்று விரும்புகிறார்.

ஆனல், வாலிபனே, விஷய முணர்ந்ததால் 'ஐக்கியம்—தன் வாழ்வைச் சுரண்டுவது' என்று அறிந்ததால், தனித்து வாழ விரும்புகிறான். ஆனல், தனித்துச் சென்றாலும், அவருடன் விரோதம் கொள்ளாது ஒற்றுமையுடன் இருக்கலாம் என்று கருதுகிறான்.

ஒற்றுமை—இவன் விரும்புவது, பழகிய தோஷம், பலநாள் உறவு ஆகிய காரணத்தால்,

ஐக்கியம்—எத்தன் ஆசைப் படுவது, சொத்துத் தன் பொறுப்பிலிருந்தால் நல்லது என்ற, பேராசையால்.

திராவிட நாட்டுப் பிரிவினை கேட்கும் நாம், வாலிபன் நிலையிலேஇருக்கிறோம். ஆனல் அவர்களோ, பேராசைக்காரர்களாக இருக்கிறார்கள் — அதற்குள்ள வார்த்தையாக "ஐக்கியம்" கிடைக்கிறது, அவர்களுக்கு.

"வாளை எடு! வீர விரோதிகள் மீது"

"மண்வெட்டி கொண்டா, வெட்டு இந்தியாவை"

---

**திண்டிவனத்தில்**

**மே 20ல்**

**சமூக சீர்திருத்த மாநாடு**

---



"அரபிக்கடலுக்கும், வங்காள விரிகுடாவுக்கும் வாய்க்கால் வெட்டுவோம்"

என்று, நாம் கூறவில்லை. கூறுமளவுக்குப் பித்தருமில்லை. ஐக்கிய இந்தியா என்ற பேச்சு, சூதுவலையாக இருக்கிறது. பலன் நமக்கில்லை! பதிலாக பாதகமே ஏற்பட்டு வருகிறது!

இதை எவரும் மறுக்கமுடியாது. மாருக, தேசியத் திருவாளர்களே, 'ஐக்கியம்' என்ற சொல்மூலம் ஏற்படும்விபரீதத்தை உணர்ந்துவருகிறார்கள். இதோ சமீபத்தில் நடந்த சம்பவம் ஒன்று.

"மொத்தம் 37 இலட்சம் டன் உணவுப் பொருள்களை வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்கிறீர்கள். ஆனல், எங்கள் சென்னை மாகாணத்துக்கோ நான்கே நான்கு இலட்சம் டன்தான் தரமுடியும் என்று கூறிவிட்டீர்கள். இந்தியா முழுதுமே பங்கீட்டுமுறைக்கு ஆட்படுத்தப் பட்ட மக்களின் மொத்தத்தொகை 12.84 கோடி. அதில், சென்னை மாகாணத்திலிருக்கும் மக்கள் தொகை மட்டும் 3.67 கோடி, (கிட்டத்தட்ட கால்பாகம்) இருந்தும் இறக்குமதி செய்கிற 37 இலட்சம் டன்னில, சென்னைக்கு தரமுடியும் என்று அறிவித்திருப்பது 4 இலட்சம் டன். அதுமட்டுமல்ல, சென்னை, தனக்கு 10 இலட்சம் டன் தேவையென்றும் அது அவசியம் தரப்படவேண்டும் என்றும், பன்முறை வேண்டுகோள் விடுத்தது. அதேபோலபம்பாய்மாகாணமும், தனக்கு 10 இலட்சம் டன் தேவையென்று தெரிவித்தது. இருந்தும், சென்னைக்குமட்டும் 4 இலட்சம் டன் தான் தரமுடியுமென்று கூறிவிட்டு, பம்பாய்மாகாணத்துக்கு 7 இலட்சம் டன் உணவுப்பொருள் தர, ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள்.

நாட்டின் கொள்முதல் முன்பு 51.63 இலட்சம் டன்னாக இருந்தது. இப்போதோ 45.21 டன்களாகக் குறைந்துவிட்டது.

ஆனல், சென்னைமாகாணம்கொள்முதல் செய்யவேண்டுமென நிர்ணயம் செய்யப்பட்டிருக்கும் அளவோ முன்பைவிட இப்போது அதிகமாக்கப்பட்டிருக்கிறது. முன்பு 11.09 இலட்சம் டன். இப்போதோ 13.22 லட்சம் டன்."

* * *

சென்னை மாகாணப் பிரதிநிதியாக, டில்லி சட்டசபையில் இடம் பெற்றிருக்கும் தோழர் ஓ. வி. அழகேசன், இதுபோல ஏப்; 7-ந்தேதி அன்று, டில்லியில் பேசியிருக்கிறார்; வேதனையோடு பேசியிருக்கிறார்.

அவர் பேசியிருக்கும் விஷயம் நம்மால் கடந்த சில வாரங்களுக்கு முன்னதாகவே எடுத்துக் காட்டப் பட்டதுதான்.

எனினும், நண்பரின் குரல், இப்போது டில்லியில் இக்குறையை எடுத்துக்காட்டி, ஒலித்திருக்கிறது.

சென்னையும் பம்பாயும் கேட்டது 10! ஆனல் சென்னைக்கு 4! பம்பாய்க்கு 7!!

வேதனையானவிபரம்தான், இது. சென்னைமக்கள், பம்பாய் மக்களை விட; கடுமையான சோதனைக்கு ஆளாகி, 'சோறு சோறு!' என்று திண்டாடிக்கிடக்கிறார்கள். பசியும் பஞ்சமும், இப்பரந்த பூமியைச் சுற்றிக்கொண்டுள்ளன. இருந்தும் டில்லியின் தயவு, பம்பாய்க்கே கிடைத்திருக்கிறது!

பம்பாய் ஆலைஅரசர்களின்தொட்டில், செல்வச் சீமான்களின் சிங்கார மண்டபம், பணம் படைத்தோர், அவரின் குணம் போற்றும் கோகிலங்கள், நிறைந்த கோலாகல பூமி! அங்கே, டில்லியை ஆட்டிப்படைக்கும் பணபாணங்கள் உண்டு! இந்தியாவின், ஆலைநகரமே, அதுதான்!

ஆனல், சென்னை? பம்பாய் அல்ல; டில்லியை ஆட்டிப் படைக்கும் ஆலை அரசர்கள் இங்கு, அங்குபோல, இல்லை. சிங்காரபுரியல்ல சென்னை; சீரழிந்தது! சீமான்களும் பூமான்களும் நிறைய இல்லாதது!

எனவே, அருள், அங்கே கிடைத்திருக்கிறது—மருள் இங்கே, அதிகமாவது தெரிந்தும். அதிக உணவுத் தான்யம் பம்பாய்க்கு, வடநாட்டு மாகாணத்துக்கு.

கொடுக்க வேண்டியதுதான், அங்கு அதிகமான மக்கள் இருந்தால். வேதனையின் அளவும் அதிகரித்துக் கிடக்கிறது என்றால், அதிகமான தான்யம் அனுப்பத்தான் வேண்டும்.

ஆனல் பம்பாயிலோ! சென்னையை விட அதிக வேதனை அங்கு இல்லை. பசியும் பாதிப்பும் இங்கேதான் அதிகம்! சோர்வுப் பேச்சும், வேதனைக் குரலும், வீட்டில் பிணமும் இங்கேதான்! இருந்தும், இங்கே 4! அங்கே 7!!!

பம்பாயின் ஜனத்தொகை சுமார் மூன்று கோடி. சென்னையின் ஜனத்தொகையோ சுமார் ஐந்து கோடி.

மூன்று கோடி மக்கள் வாழும் பம்பாய் மாகாணத்துக்கு 7 லட்சம் டன்!

ஐந்து கோடி மக்கள், நிறைந்து கிடக்கும், பரந்த சென்னைக்கு 4 லட்சம் டன்!!

'ஐக்கியம்' எங்கே!—நான்கு ஆண்டுகள் ஆகிவிட்டன, 'ஐக்கிய இந்தியா'வில் நாம் சேர்ந்திருந்து. அதனல் ஏற்பட்ட பலன்?

உணவு,

உடை,

நிதி வசதி

---

எதில், 'ஐக்கியம்' நமக்கு நலன் விளைவித்திருக்கிறது, கூறமுடியுமா, கூறுவார்களா? வேதனையும் விபரீதமும்தான் 'ஐக்கியத்தால்' கிடைத்தது தவிர, வேறென்ன விளைந்தது?

எனவே, ஐக்கியம் என்ற சொல் கேட்க இனிக்கலாம்; கவைக் குதவாது!

'சேர்ந்து கொண்டிரு' என்பதும், 'முடியாது — பிரிவோம்' என்பதுமான சச்சரவுகள், இந்த ஐக்கிய ஆலாபனையால் முடிவு பெற்றுவிடாது.

இதை, பிரசாத் போன்றாரும் அவர்தம் தோழர்களும் மனதில் இருத்த வேண்டும்.

அதன் நினைவாக, பலமுறை, நமது இலட்சியம் குறித்து நாம் கூறிவரும் விளக்கத்தை, மீண்டுமொருமுறை கவனமூட்டுகிறோம்— கூச்சல் போடும் கும்பலும், கோமாளித்தன ஏடுகளும், 'புதுரகங்களும்' காங்கிரஸ் வட்டாரத்தில் சலசலப்புக் காட்டுவதால்:

1. இந்தியா என்பது ஒரு கண்டம். எனவே அது பல நாடுகளாகத் தான் பிரிக்கப்படவேண்டும். ஐரோப்பாக் கண்டத்தில் 32 தனித்தனி நாடுகள் உள்ளன. ஐரோப்பா முழுவதும் ஒரு குடைக்கீழ் இருக்க வேண்டுமென யாரும் கூறவில்லை. இந்தியாவும் ஒரே குடையின்கீழ் இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை.

2. இந்தியா, பிரிட்டிஷ் ஆட்சி ஏற்படுவதற்கு முன்பு தனித்தனி ஆட்சி கொண்ட 56 தேசங்கள் உள்ள கண்டமாகத்தான் இருந்து வந்தது. பிரிட்டிஷார் தமது ஆட்சி சரியாக நடக்கச் சௌகரியம் தேடிக்கொள்ளவே இந்தியாவை ஒரே நாடு என்று கருதினர், மற்றவரையும் கருதும்படி செய்தனர்.

3. மதம், மொழி, கலை, மனநிலை, ஒரு குடிமக்கள் என்ற உணர்ச்சி, வரலாற்று பந்தத்துவம் இவைகள்தான் இன இயல்புகள். இந்த முறையில் பார்த்தால் இந்தியாவில தனித்தனி இனங்கள் பல உள்ளன. அவைகளை இரண்டு பெரும் பிரிவுகளாகக் கொள்ளலாம் திராவிடர், திராவிடரல்லாதார் என்று. இந்த இனங்களில் அதிகமான வித்தியாசம் இன இயல்புகளில் உண்டு. இரு இன இயல்புகளுக்கும் துளியும் பொருத்தம் கிடையாது. பகைமை பெரிதும் உண்டு. இந்தத் தனித் தனி இயல்புகள் இருப்பதால், இனவாரியாக இந்தியா பிரிக்கப்பட்டால்தான் அந்தந்த இனத்துக்கென இடமும் ஆட்சியும் கிடைக்கும். இல்லையேல் எந்த இனம் தந்திரத்தாலும் சூதுசூழ்ச்சியிலும் தன்னலத்துக்காப் பிறரை நசுக்கும் சுபாவத்திலும் கைதேர்ந்து இருக்கிறதோ அந்த இனத்திற்கு மற்ற இனங்கள் அடிமைப்பட்டு வாழ வேண்டி நேரிடும்.

4. இந்தியா ஒரே நாடு என்று கூறி வருவதால் ஒரு சாரார் ஆதிக்கம் வளருகிறது. ஒரு சாரார் ஆட்சி

---

வீரகீதம் பாடுவோம்!
வெற்றி முரசு கொட்டுவோம்!
புது வாழ்வு காட்டுவோம்!
புதுமை நிலை நாட்டுவோம்!

## சேலம் மாவட்ட
# தி.மு.க. முதல் மாநாடு

மே 5, 6, இரு நாட்கள்

சேலம் அரிசிப்பாளையம் சாமிநாதபுரம்

★ தியாகராயர் பந்தலில் ★

தலைவர் : நாகர்கோயில் வி. எம். ஜான்

துவக்குபவர் : சென்னை சத்தியவாணிமுத்து

பொதுச் செயலாளர் சி. என். ஏ, முன்னணி வீரர்கள்
யாவரும் பங்கு கொள்வர்.

"சந்திரமோகன்" "நீதிதேவன் மயக்கம்" கலைவிருந்து.

உணவு வசதி உண்டு.

| | | | |
|---|---|---|---|
| அ. சித்தையன், | ப கண்ணன், | ஆர். நாராயணசாமி, | ஜி. பி. சோமசுந்தரம் |
| செயலாளர். | விளம்பர அலுவலாளர். | பொருளாளர். | வரவேற்புக் குழுத் தலைவர். |

---



யின் காரணமாக மற்ற இன நலன்கள் தவிடு பொடியாயின.

5. முரண்பாடுள்ள இயல்புகளைக் கொண்ட இனங்களை ஒன்றுகச் சூழ்ச்சியால் பிணைத்துக் கட்டுவதால், கலவரமும் மனக் கிலேசமும் தொல்லையுமே வளர்ந்தன. எனவே எதிர்காலத்தில் தொல்லைகள் வளர்ந்து இந்தியா இரத்தக் காடாகாதிருக்க வேண்டுமானால், சமரசமாக, இனவாரியாக இந்தியாவைப் பிரிக்கவேண்டும்.

6. இனவாரியாக நாடு பிரிக்கப்படுவது என்பது புதிதுமல்ல, கேட்டறியாததுமல்ல. ஏற்கனவே இந்தியாவில், பிரிட்டிஷ் இந்தியா, சுதேச இந்தியா, பிரன்சு இந்தியா, டச்சு இந்தியா எனப் பல இந்தியாக்கள் உள்ளன. இதுபோல் முஸ்லிம் இந்தியாவும் ஏற்பட்டு 'பாகிஸ்தான்' தனி நாடாகிவிட்டது.

7. ஓட்டமான் சாம்ராஜ்பத்தின் பிணைப்பிலிருந்து விடுபட்ட துருக்கி, வல்லரசுகளில் தலை சிறந்ததாக ஆனதுபோல், இனவாரியாக இந்தியா பிரிக்கப்பட்டால், ஒவ்வொரு வட்டாரமும், தனிக் கீர்த்தியுடன் விளங்கும்.

8. தனித்தனி வட்டாரமானால், அந்தந்த பிரதேசத்தை அவரவர் இயல்புகளுக்கு ஏற்றபடி வளர்க்க ஏது உண்டாகும்.

9. அசோகர், கனிஷ்கர், ஹர்ஷர், சமுத்திரகுப்தர், அக்பர் முதலிய மன்னாதி மன்னர்கள் காலத்திலும், இந்தியா ஒரே நாடாக இருந்ததில்லை. அப்போதும் திராவிட நாட்டுப் பிரதேசம் எனத் தனியாகத்தான் இருந்தது.

10. தனித்தனி வட்டாரம் பிரிந்தால், அங்கங்குள்ள வசதிகளுக்கேற்றபடி பொருளாதார விருத்தி செய்து கொள்ளவும், ஒரு வட்டாரம் மற்ற இடங்களைச் சுரண்டும் கொடுமையை ஒழிக்கவும் முடியும்.

11. அந்தந்த இனத்துக்கெனத் தனித்தனி இடமும் ஆட்சியும் இருந்தால்தான் அந்தந்த இனமும், மற்றவைகளிடம் சம உரிமை, சம அந்தஸ்து பெறமுடியும்.

12. இந்தியா ஒரே நாடாக இருக்கிறதென்று கூறித்தான் ஆரியர்கள், இமயம் முதல் குமரிவரை உள்ள இடத்தைத் தமது வேட்டைக் காடாக்கிக்கொண்டு, அரசியலில் அதிகாரிகளாய், கல்வியில் ஆசான்களாய் மதத்தில் குருமார்களாய், சமுதாயத்தில் பூதேவர்களாய், பொருளாதாரத்தில் பாடுபடாது உல்லாச வாழ்வு வாழக்கூடியவர்களாய் இருக்கவும் மற்ற இனத்தவர் தாசர்களாய், பாட்டாளிகளாய், உழைத்து உருவின்றி சிதைந்துவாடவுமான நிலைமை ஏற்பட்டுவிட்டது. இந்தக் கொடுமை நீங்க, வர்க்கத்துக்கொரு வட்டாரத்தைப் பிரிப்பதுதான் சிறந்தவழி.

13. ஒரு இனத்திடம் மற்றொரு இனத்துக்கு நம்பிக்கை இல்லை. ஒரு இனத்து ஆட்சியின்கீழ் மற்றொரு இனம் இருப்பது என்று சொன்னாலே அச்சம் உண்டாகிவிட்டது. அச்சமும் அவநம்பிக்கையும் பெற்றெடுக்கும் குழந்தையே பயங்கரப் புரட்சி. இந்தப் பயங்கரப் புரட்சியைத் தடுக்கவே, இப்போது பிரிய வேண்டும் என்கிறோம்.

14. இந்தியா பிரியாது இருந்தால் இதுவரை, ராணுவ பொருளாதார அறிவுப்பலம் வளர்ந்ததாகவோ, இந்திய இனம் என்ற புதுசமுதாயம் அமைந்ததாகவோ கூற எந்த ஆதாரமும் இல்லை.

ஆகவே, 'எவ்வளவு பெரிய நாடு தெரியுமா, எங்களுடையது' என்று பெருமை பேசிக் கொள்வதற்காக 'ஐக்கிய ஆலாபனம்' செய்வது, பலன் தராது; கேலிக் கூத்தாகத்தான் முடியும், பர்வதம்மாள் கதையைப் போல

பல கலாச்சாரங்கள் உலவும் ஒரு மாபெரும் உபகண்டம், எப்போதும் ஏக ஆட்சியிலேயே, இருந்துவிடும் என்று நினைப்பது, பலன் தராது.

ஏனெனில் பல இனங்கள் உலவும் பரந்த இப்பூமி, வர்க்கத்துக்கோர் வட்டாரம் ஆனால்தான் சிருஞ்சிறப்புடன் விளங்க முடியும். இல்லையெனில், யானையை வைத்துக் கொண்டு தீனிபோட்டு திண்டாடியவன், கதை போலவே முடியும்.

எனவே, ஐக்கிய ஆலாபனம் பாடுவோர், சிந்தித்துப் பார்க்கவேண்டும், எது நீடிக்கும் எது உண்மையானது என்று.

சிந்திப்பதற்குப் பதில் 'பிரிவினை மனப்பான்மையை எப்படியாவது தடுக்கவேண்டும்' என்று கூறுவது, தற்கால சாந்திக்குப் பயன்படலாமே தவிர, வெற்றி தராது.

வீர முழக்கமும், வெற்றுக் கூச்சலும் கலந்து ஒலிக்கும் காங்கிரஸ் வட்டாரத்தினர் இதைப் புரிந்து கொள்வது அவசியம்.

---

# சேலம் மாநாடு

மே மாதம் 5, 6, (சனி, ஞாயிறு) நாட்களில் அரிசிப்பாளையத்துக் கடுத்த சாமிநாதபுரத்தில் நடைபெறும்.

மாவட்ட மாநாடுகளின் வரிசையில் இதுவே கடைசி மாநாடாதலால், புதுமை நிரம்பியதாக விளங்கும்.

இதுவரை வெற்றியுடன் நடைபெற்ற ஏனைய மாநாடுகளைவிடபெரிய அளவில் 'தியாகராயர் பந்தல்' நிர்மாணிக்கப்பட்டு வருகிறது.

சனியன்று 'சந்திரமோகன்' நாடகமும் ஞாயிறு இரவு 'நீதிதேவன் மயக்கம்' நாடகமும் நடைபெறும்.

பொதுச் செயலாளர் சி. என். ஏ. நடிப்புப்புலவர் கே. ஆர். ராமசாமி, ஈ. வி. கே. சம்பத் ஆகியோரும், பல நடிகமணிகளும் பங்கு கொள்வர், மேற்படி நாடகங்களில்.

மாநாட்டில், வெளியூர்ப் பிரதிநிதிகளுக்கு உணவு வசதி உண்டு.

தோப்பும், வயலும் சூழ்ந்த 'இயற்கையின் தொட்டில்' போல இருக்கிறது, மாநாடு நடைபெறும் இடம்.

'சேலம்' மாநாடு — புதுமையின் சின்னம்! எனவே, எல்லா மாவட்டத் தோழர்களின் வருகையையும் எதிர்பார்க்கிறோம்.

கீழ்க்கண்டவிதமாக கட்டணங்கள் முடிவு செய்யப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| வரவேற்புக் குழுவினர் | ரூ. 5 |
| பிரதிநிதி | ரூ. 2 |
| பார்வையாளர் | ரூ. 2 |
| பெண்கள் | ரூ. 1 |

உணவுக் கட்டணம் தனி.

வரவேற்புக் குழுவினர்.

Bleed through.

திராவிட நாடு

ஞாயிறு] 15—4-51 [காஞ்சி

## 'மூகாரி'யால், தீராது!

★

பெருக்குங்கள்!

உற்பத்தியைப் பெருக்குங்கள்!

உணவுற்பத்தியைப் பெருக்குங்கள்!

அண்மையில், 'பம்பாயிலே பேசிய பண்டித நேரு, வேதனை கலந்த ஆவேசத்தோடு, நாட்டு மக்களுக்கு விடுத்தாராம் இச்செய்தியை.

"இதென்னபுதியதோ? இப்போது மேடையேறினால், எதிர்க்கட்சி களைத் திட்டியதுபோக, மீதிநேரம் இந்தப் பஜனையைத்தானே பாடுகின்றனர் காங்கிரஸ் பிரமுகர்கள்" என்று கேட்பீர்கள், காலத்துக் கேற்ற ஜாலம், என்ற 'சூட்சமம்' காங்கிரஸ் கூடாரத்தில் உதயமாகி இருக்கிறதென்பதை, எடுத்து விளக்குவதுபோல.

அப்படியிருந்தால்கூட சிறிது மகிழலாம், உடைந்த இசைத்தட்டு போல 'சுயராஜ்யம் பெற்றோம்!' என்பதையேத் திருப்பித் திருப்பிப் பாடாது, வேறு சில விஷயங்கள் குறித்து விளக்கம் தருமளவு விவேகம் ஏற்பட்டிருக்கிறதே, என்பதால்.

ஆனால், நமக்கு அந்த மகிழ்ச்சியைக்கூடத் தரவில்லை அவர்கள்!

* * *

காலிலே காயம்! ஒரு கையிலே மண்வெட்டி! தார்குச்சி மற்றோர் கையில்! தாரம், தன்கணவனின் முதுகிலிருந்து வடியும் வியர்வையைப்பார்த்தபடிபின்னால்வருகிறாள்! அவளது தலையிலே கூடை, அதைத் தாங்கிக்கொண்டு ஒரு கையும், உடலை மறைக்கும் ஒட்டுப்போட்ட கந்தல் காற்றிலே பறக்காமல் தடுக்கும் இன்னொரு கையுமாகச் செல்கிறாள்! பக்கத்திலே, ஆடையின்றி, பிறந்தமேனியாய்'ஹை!ஹை' என்று மாடுகளை விரட்டுவதே, சகசோஷம், என்ற நினைப்புடன் ஓடிவரும் சிறுபையன்!

விவசாயி, வேதனைப்படும் மனைவி, உலகமுணரா சிறுவன்—காட்சியைக் காண்போர், 'ஆகா, என்னே பரிதாபம்!' என்பர், சிறிது இரக்கமுள்ளவர்களாக இருந்தால். 'உழவனின் பொறுமை யாருக்கு வரும்—அவனன்றி ஓர் அணுவும் அசையுமோ' என்று, கோறுகவர், பேசவும் எழுதவும் கற்றவர் 'அவன் வியர்வை சிந்துகிறான், வீணர்கள் கொழுக்க! விதைக்கிறான்—அறுப்பதில்லை!' என்று, ஆவேசத்தோடு பேசுவர், அரசியல் சற்று, அதிலே சிறிது கவலையும் கொண்டோர். ஆனால், அவனோ! சுற்றுமுற்றும் பார்ப்பதில்லை. சுகம், உலகம், ஒப்பு, உல்லாசம் எல்லாம் அவனுக்கு அந்தக் 'காணி நிலம்தான்!' அவனுக்குச் சந்தோஷம். தன் வயலிலே நீர் பாய்ந்து நெல் விதைக்கும்போது! மகிழ்ச்சி—மண் வெட்டி. காலிலே வீழ்ந்தும், 'சிறு காயம்தான் — பெரிய காயமல்ல' என்று கூறுவதுதான்.

விவசாயி, ஒரு வேதனையின் சின்னம்! மனிதப் பயபாம்!!

* * *

இவர்களின் வாழ்வு பற்றி பேசாதோரில்லை—சர்க்காரைச் சார்ந்தோரும், அரசியல் கட்சியினரும், எல்லோரும், 'பார் முழுதும் ஏர் முனையிலே' என்ற பாட்டைக் கேட்கும் போது, ரசிக்கத்தான் செய்கின்றனர்.

மேலே கூர்சில்க், பளபளக்கும் ஜரிகை அங்கவஸ்திரம், விரல் ஒவ்வொன்றிலும் விசித்திர வர்ணங்காட்டும் வினோத வைரங்கள்! ஆவேசத்தோடு பேசுகிறார்:

"விவசாயத்துக் கேற்ற சாதனங்கள் தேவை. எரு, மாடுகள், மண்வெட்டி, கலப்பை போன்றவைகளை வாங்குமளவுக்கு விவசாயியின் பொருளாதாரம் இடங் கொடுக்கவில்லை."

'முழக்கம்!' என்ற தலைப்பு, அதை ஆதரித்து ஒரு தலையங்கம், பத்திரிகைகளிலே வந்து விடுகின்றன, 'விவசாயத் துறையை வீழ்ந்டட்டு வரும்... பண்ணைக்காரர்' என்ற குறிப்போடு. ஆனால் எவருக்குத் தெரியும்? அந்தப் பண்ணைக்காரர், நூற்றுக் கணக்கான ஏக்கருக்குச் சொந்தக்காரர் என்பது, நிலம் இருக்குமிடம் தெற்கா வடக்கா என்று தெரியாதவரென்பதும், யார் அறிவர்!' அறிந்தாலும், கூறுவரா இதை!

'பண்ணைக்காரர் — பேசினார். அவர், காங்கிரஸ்காரர்' அவ்வளவுதான், ஆனால், அடுத்த மாதம் நடைபெறப்போகும் தன் பையன் திருமணத்துக்கு பணம் தேவைப்படவே, பிறரிடம் கேட்டால் தனது பெரிய மனுஷத்தனம் கெடுமென்று கருதி, 'நில அடமான பாங்கி'யில் ஒரு மனுவும், விவசாயத் துறையில் புதிய முறை கையாளப் போவதால், 'பண உதவி' வேண்டும் என, சர்க்காருக்குச் செய்துகொண்ட மகஜரும்!

x x x

வயலிலே உழைப்பவன் வதைகிறான்!

அவனை மேய்த்து வாழ்வோர் உலவுகின்றனர்—உல்லாசத்தோடு!

உழைப்போர் பலர், அவர் தம் பயன் கருதாச் சேவையால்தான் பார் வாழுகிறது; உற்பத்தி பெருகிறது, வயலிலே கதிர்! களத்திலே நெல்! அத்தனையும், அவர்கள் வியர்வையின் விளைச்சல்!

உற்பத்தி பெருக்கத்தின் உயிர்நாடி—அவர்கள்தான்.

ஆனால், அவர்கள் நிலை...?

x x x

"உணவு உற்பத்தி பெருகவேண்டும்!"

"ஆமாம்! பெருகவேண்டும்—அதற்காக என்ன செய்தீர்கள்?"

"என்னவா — அணைக்கட்டுகள் கட்ட பல கோடி ரூபாய் களை ஒதுக்கியிருக்கிறோம். கட்டப்பட்டும் வருகிறது, இன்னும் ஐந்து—பத்து வருஷத்துக்குள் முடிந்து விடலாம். மேலும், விவசாயத்துக்கு வேண்டியது தண்ணீரல்லவா?"

"ஆமாம்! அது, இல்லாததால் தானே அவதியும், பஞ்சமும் அதிகமாகிக்கொண்டிருக்கிறது......"

"அந்தக் குறை போக்கவும் ஏற்பாடுகள் செய்துள்ளோம். நாடெங்கும் வனமகோற்சவம் கொண்டாட உத்தரவிட்டோம். அது ஏன் தெரியுமா?"

"தெரியும், தெரியும்! நட்ட மரத்தில் ஐந்தில் ஒரு பங்கே உருத்தேறியதென்பதும் தெரியும். அதற்



புரட்சிக் கவிஞர்

பாரதிதாசன்

★ மணி விழா ★

20-4-51 முதல் 29-4-51 வரை

திருச்சி தேவர் ஹாலில்

எதார்த்தம் பொன்னுசாமி,

வ. க. த.

காக வீணாக்கிய பணம் எத்தனை லட்சம்?"

பதில் வராது! பார்வை, கோபமாக மாறும்!

இந்திய உபகண்டத்தின் முக்கிய தொழில் விவசாயமே ஆகும்.

ஒரு நாட்டின் செல்வநிலை குறித்து அறிய வேண்டுமானால், அந்த நாட்டின் முக்கிய தொழில் எது, பெரும்பாலான மக்கள் என்ன செய்கிறார்கள், என்பதே முக்கியமாகும்.

பொதுவாக, மேலை நாடுகளில் அந்நாட்டின் இயந்திர உற்பத்திகள் மீதே, அந்நாடுகளின் செல்வநிலை கணக்கிடப்படுகிறது.

இந்திய உபகண்டம் அப்படிப்பட்டதல்ல.

இங்கு விவசாயமே முக்கிய தொழில். அடுத்தபடிதான் ஆலைத் தொழில்கள்.

ஆனால், ஆட்சியாளரும்சரி பிற அறிஞர்களும்சரி, ஆலைத் தொழிலில் சிரத்தை கொள்ளுமளவு, விவசாயத்தில் அக்கரை கொள்வதில்லை.

காரணம், நல்லலாபம்—அதுவும் சுலபமாகப் பெறலாம்—என்பதும், நகர்ப்புறவாசம் ரம்யமாக இருக்கிறது என்பதுமேயாகும்.

இதனால், கிராம வாழ்வும், விவசாய அக்கரையும் செல்லரிக்கப்பட்டு வருகிறது.

இந்த வேதனை ஒருபுறமிருக்க, நாட்டின் ஜீவநாடியான விவசாயமோ ஆள்வோர் அக்கரை காட்டாத நிலையிலிருக்கிறது.

விதைத்து அறுப்போராக இருப்போர் 90 சதவிகிதம் என்றால், விதைக்காத 'மிராசு' என்ற பெயருடன் வாழ்வோர் 10 சதவிகிதமே உள்ளனர்.

உணவுற்பத்தி பெருகுவதும் குறைவதும் விதைத்து அறுப்போர் கையிலும், உழைப்பிலுமே இருக்கிறது.

ஆனால், விதைத்து அறுப்போருக்கு, வேண்டிய அளவு விவசாயத்துக்கான உதவிகள் சர்க்காரால் செய்யப்படவில்லை.

விதைத்து அறுப்போர், பெரும் பண்ணைக்காரர்களல்ல — சிறு சிறு 'குட்டி'ப் பண்ணைகள்!

ஆனால் ஆட்சியாளரின் அக்கரையும் உதவியும் பெரும் பண்ணைகளுக்கே கிடைக்கிறது—முன்பு நாம் எடுத்துக் காட்டியபடி, அவர்கள் குரல் சட்டசபையில் ஒலிப்பதாலும், அதற்கு ஆதாவு பல 'ஏடுகள்' அவர் தம் துணை கிடைப்பதாலும்.

இந்திய உபகண்ட விவசாயி ஏழ்மையின் பிம்பம்! காரணம், அவனது தேவைகள் மிகப் பல; வயல் தரும் வருமானமோ சொற்பம்.

எனவே, கடன் கடலில் சிக்கிக் கரையேற முடியாது அதிலேயே சாகிறான்.

இதை நிவர்த்தி செய்யும் நன்னோக்குடன் துவக்கப்பட்டு பணியாற்றி வருவதே நில அடமான பாங்கிகள், என்பவை.

இந்த பாங்கிகளின் சேவையும், பலனும், பல கிராமத்தாருக்குத் தெரியாது; புரியாது! ஆகவே இதன் நற்சேவையை விவசாய மக்கள் பயன் படுத்திக் கொள்ளும்படியான வழிவகைகளைச் செய்யவேண்டும்.

அதே நேரத்தில் விவசாயிகளுக்குத் தேவையான எரு, கலப்பை, மாடு, விதை முதலாய பொருள்களைப் பெறுவதற்கான வகையில் சர்க்காரே பண உதவி, அளிக்கவும் வேண்டும்.

குருடுகளாய், செவிடுகளாய், கோவணாண்டிகளாய்த் திரியும் ஏழை விவசாய மக்களின் குறை போக்க நீண்டகால திட்டங்கள் அதிகம் தீட்டுவதைவிட, உடனடித் தேவைகளைக் கவனிப்பதே முக்கியம்.

'வாய்ச் சொல்லில் வீரரடி!' என்ற பாரதியார் பாடலின் உதாரணங்களாய் விளங்கும், நமது அமைச்சர்கள், 'பெருக்கவேண்டும்! பெருக்கவேண்டும்!' என்ற பிரசங்கங்கள் புரிவதைவிட, இதுபோன்ற உடனடித் தேவைகளை, விவசாய மக்களுக்கு ஏற்படுத்தித் தருவதில் அக்கரையும் ஆசையும் கொள்ள வேண்டும்.

பெரிய பண்ணைகளின் சுயலகாரி பங்களுக்காக, ஏதோ பேரில், பணம் தருவதும் அது பக்கத்து நிலங்களை வாங்கவும், பையன் கலியாணத்துக்கு உதவுவதுமான செயல்களுக்குப் பயன்படுவதுமான நிலை, சர்க்காருக்குத் தெரிந்தே நடைபெறுகிறதென்பது, தெரிந்த விஷயம் (ஏன்? சர்க்காரிலிருப்போருக்கே சம்பந்த முன்டென 'திருவேங்கிமலை' கதை சொல்வோரும்இருக்கிறார்கள்!)

இதுபோன்ற உடனடி உதவிகளைச் செய்யவேண்டிய பணவசதி, மகாகனங்களுக்கில்லாமல் மத்திய சர்க்கார் உண்டாக்கியிருக்கும் விபரீதநிலையை நாம் அறிவோம்.

எனினும், நமது விவசாய நலன் கருதி, அதன் உடனடித்தேவைகளைத்தீர்க்க, எல்லாவழி வகைகளையும் கண்டு—விவசாயியின் வேதனைகள், ஓரளவாவது, குறைக்கப்பட வேண்டும்.

அப்போதுதான், உற்பத்தி பெருகும்; அதற்குப் பதில் 'பெருக்க வேண்டும்! பெருக்க வேண்டும்!' என, முகாரி பாடுவதால், கவலையும் தீராது—பலனும் ஏற்படாது. ✕

## கம்யூனிஸ்டுகள்

காங்கிரஸ் ஆட்சிப்பீடம் ஏறியது முதல், அவதிக்கும் சோதனைக்கும் ஆளாகி வருவோரில் கம்யூனிஸ்டுக் கட்சியினரே முதலிடம் பெறுவர்.

கம்யூனிஸ்டுக் கட்சியின் மிகப் பெரும் பாலானோர் காங்கிரசின் செல்வக்குழந்தைகளாக ஒருபோது உலவியோர்தாம்.

ஆனால், இப்போது 'கம்யூனிஸ்டுகள்' என்ற வார்த்தையை, ஏதோ 'அணுகுண்டு' என்று கூறுவது போல கூறி வருகின்றனர், தேசியத் தலைவர்கள்.

கம்யூனிஸ்டுகளின் போக்கிலும், கொள்கையை உருவாக்கும் வழியிலும் கோளாறுகள், நிறைய, இருக்கலாம்.

"நேரு சர்க்காரைக் காப்பாற்றுவோம்!" என்று எழுத்தாலும், படத்தாலும், பேச்சாலும் காங்கிரஸ் ஆட்சி அரும்பியபோது அவர்கள் கடைப்பிடித்த கொள்கையையும், அது வெகுவிரைவில் 'வெறிப் பாதை' ஆக மாறியதையும், நாம் மட்டுமல்ல நாடேகண்டது.

நிலையான கொள்கை, 'அதைநிறைவேற்றும் நல்லபாதை, அவர்களுக்குத்தென்படாமலிருக்கலாம். தங்கள் காரியங்களில் வெற்றி காண வேண்டுமென்ற 'வேறி'யின் காரணமாக விபரீத விளையாட்டுகளில் அவர்கள் இறங்கவும் செய்யலாம்.

அத்தகைய வழிகளில் அவர்கள் சென்றால் தடுக்கவும், திருத்தவுமான பொறுப்பும் அதிகாரமும் சர்க்காருக்கு இருக்கின்றன.

சர்க்கார், 30 கோடி மக்களை ஆள்வது! அவர்களோ, ஒரு சில ஆயிரம் பேர்களின் மத்தியில் உலவுவோர்!

அவர்கள் அட்டகாசப்பாதையில் சென்றால் அடக்க, பிடிக்க, அடைக்க ஏராளமான போலீசும், இராணுவமும் சர்க்கார் கையிலிருக்கின்றன.

இருந்தும், இப்போது அடிக்கடி வரும் செய்திகளைக் காணும்போது மனந்துடிக்க வேண்டியவர்களாகவே இருக்கிறோம்,

"தெலிங்கானாவில் இன்று ஒரு கம்யூனிஸ்டு சுடப்பட்டார்"

"கம்யூனிஸ்டுகளுக்கு தூக்கு"

என்பது போன்ற செய்திகள், இப்போது சகஜமாகிவிட்டன.

மனித வாழ்வு—நீர்க்குமிழியல்ல; நினைத்ததும் மலரவும், உடனே கசக்கி எறியவுமான மலருமல்ல. அது, ஒரு இலட்சியத்தேர்.

ஆனால், காங்கிரஸ் ஆட்சியிலோ, அது சின்னாபின்னப் படுத்தப்படுகிறது; கசக்கி வீசப்படுகிறது.

அரும்புமீசைக் காளைகள், குடும்ப வாழ்வு விளக்குகள், வயோதிக வாழ்க்கைச் சின்னங்கள், எல்லாம் கணநேரத்தில் பிணமாகிவிடுகின்றன — கட்டாயமாக இவ்வுலக வாழ்க்கையினின்றும், பிரிக்கப்படுகின்றனர்.

கொடுமை! கொடுமை!! அகிம்சை பேசி, ஆட்சிபெற்றோருக்கு இது அழகல்ல. ஆசைமனைவியின் அன்பு முகத்தை முத்தமிடவேண்டிய இளமைக்காளையின்எண்ணமும்வாழ்வும் குண்டால் சிதைத்து எறியப்படுவது - குருதி கொதிக்கக்கூடிய கொடுமை.

கம்யூனிஸ்டுகளும் மனிதர்கள்தான். அவர்கள், அரசியல் பாதை புகுந்ததும், மக்களின் நலனை எண்ணியே ஒழிய 'எப்போதும் ஏதாவது தொல்லை தரவேண்டும் ஜன சமுதாயத்துக்கு' என்பதல்ல. அவர்கள் செல்லும் பாதை, படுகுழியாக இருக்கலாமேயொழிய அவர்களது நல்லெண்ணத்தை, வாழ்வின் இன்பங்களை வெறுத்துக்கிளம்பிய 'தியாக' இதயத்தை, யாரும் மறுக்கமுடியாது; மாசும கற்பிக்கமுடியாது. அத்தகைய ஒரு அரசியல் கட்சியினரை சதா அல்லலுக்கே ஆட்படுத்திக் கொண்டிருப்பது, அழகல்ல; நீதியுமல்ல.

பேசாதே என 144 போடுவதும், வெளியிலே தலைகாட்டவும் கூடாதென விசேஷ உத்திரவுகள் பிறப்பிப்பதும், துப்பாக்கியால் சுட்டுத்தள்ளுவதும், கொடுமையான 'தர்பார்' என்று கூறப்படும் ஆட்சியின் சேட்டைகளாகும்.

அந்த நிலை, காந்தியாரின் சாந்தசீடர்கள் காலத்தில் நடப்பது, நல்லதல்ல; அதுவும் பொதுத் தேர்தல் வருகிறது, எல்லோருக்கும் பேச்சுச் சுதந்திரம் உண்டு என்று பறைசாற்றிக்கொண்டு அதே கோதத்தில் அவர்களைப் பிடித்து அடைப்பதும், அவர்கள் பேசக் கூடாது என்று தடுப்பதும், ஜனநாயக முறையைச் சாவுக்குழியில் தள்ளுவதாகும்.

மனித உயிர்களுக்கு மதிப்பளிக்க வேண்டியதும், மனித உயிர்களை வேதனைக்காளாக்காமல் காப்பாற்ற வேண்டியதுமே சர்க்கார் என்ற பதத்தின் பொருளாகும்.

இதை காங்கிரஸ் ஆளவந்தார் கவனத்திலிருத்த வேண்டுகிறோம்.

அதிகாரம் இருக்கிறது என்பதால் சுட்டுத் தள்ளுவதும், அடக்குமுறைகளுக்கு ஆட்படுத்துவதும், நீடிக்காது.

இதை, வரலாறுணர்ந்த காங்கிரஸ் பீடம், கவனிக்கவேண்டும்.

## இராமநாதபுரம் தோழர்களுக்கு!

இராமநாதபுர மாவட்ட (சிவகங்கை) மாநாட்டின் வரவேற்புக் குழு 21—4—51 காலை சிவகங்கையில் கூடுகிறது. அதில் மாநாடு சம்பந்தப்பட்டோர் அனைவரும் கலந்து கொள்ள வேண்டுகிறேன்.

அன்பன்,
இராஜசேகரன்.

## வருந்துகிறோம்



காஞ்சி மறுமலர்ச்சிக் கழக வீரர்களில் ஒருவரும், நமது கழகத் தொண்டருமாகிய தோழர் M. P. சொக்கலிங்கம் கடந்த 2—4—51 அன்று, வெம்மை நோயால் கம்மிடமிருந்து பிரிக்கப்பட்ட செய்தி கேட்டு திடுக்குற்றோம்.

இளம் மனைவி, அருமைப் பெற்றோர், ஆசைச் சகோதரர்கள், துயருக்காளான தோழர்கள் ஆகியோரை விட்டு, அவர் மூச்சு காற்றோடு கலந்துவிட்டது. அவரது பிரிவு நமக்கு, ஒரு நஷ்டம்! வேதனையும் துக்கமும், மனதில் அலை அலையாக மோதினாலும், அதை அடக்கிக்கொண்டு, அவரது தந்தையார் எம். வி. எம். பச்சையப்பனுக்கும் பிரிவால் பெருந்துயர் கொண்டவர்களுக்கும் நமது ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# ★ பரி'கரி'யான படலம் ★

"மன்னா"

"என்ன?"

"குதிரை தருகிறேன்"

"அழகான குதிரைகளாக..."

"மிக அற்புதமான குதிரைகளாக..."

"தர முடியுமா?"

"எவ்வளவு வேண்டுமானாலும்!"

"அப்படியானால், குதிரைகள் பத்து வேண்டுமா?"

"ஆகட்டும், மகாராஜ், அவ்விதமே..."

"இதோ பணப்பை—இருக்கிறது இரண்டாயிரம்! போ, குதிரையுடன் திரும்பி வா"

மன்னன், வந்தவனை அனுப்பிவிட்டு வெற்றிக் களிப்போடு திரும்பினான், மந்திரி பக்கம்! மந்திரியோ, வெகு அவசரமாக எதையோ எழுதிக் கொண்டிருந்தான். மன்னனுக்குச் சற்று கோபந்தான்—இருந்தாலும், அடக்கிக்கொண்டான். ஏனெனில், அவன் மதியூக 'பட்டி' யாயிற்றே!

"நான் குதிரை ஒப்பந்தம்செய்துவிட்டேன், நீர் குனிந்த தலை நிமிராமல் ஏதோ கிறுக்கிக் கொண்டிருக்கிறீர்!" என்றான் மன்னன். அவன் குரலில் கடுமையிருந்தது!

"........" மந்திரி பேசவில்லை.

"மந்திரியாரே!......"—கூவினான் மன்னன்.

"கூப்பிட்டீர்களா?......மன்னிக்க வேண்டும் ஆழ்ந்த யோசனை, அவசரமான தயாரிப்பு, அதனால்தான் தாங்கள் அழைத்தும் என் செவி செவிடாகிவிட்டது!"

"என்ன அவசரமான தயாரிப்பு?"

"ஆம், இந்நாட்டின் முட்டாள்கள் பட்டியல் தயார் செய்கிறேன்"

"என்ன..."

"ஆம், மகாராஜ்..."

"அப்படியானால், உமது முட்டாள்கள் பட்டியலில் முதல்வன் பெயரைப் படியும்"

"அவசியமா இது..."

"படியும்—மன்னன் கட்டளை!"

"பூலோக பூபதி மகாராஜ்"

"ஆகா, என் பெயர் அது"

"ஆம், தாங்களே, முட்டாள்களில் முதல் முட்டாள்"

மன்னனுக்கு, தாங்க முடியாத கோபம்—இருந்தாலும் மந்திரியாயிற்றே—மதிப்புண்டே, நாட்டில் அவனுக்கு!

"நான், ஏன் முட்டாள், சொல்லும்" என்றான் மன்னன்.

"மகாராஜ், தங்களுக்கு குதிரை வேண்டும்—சரி. அதனை வாங்க ஒப்பந்தம் செய்யவேண்டும்—அதுவும் தவறில்லை. அது யாரோடு, எப்போது என்பதை ஆராயவேண்டும். குதிரை வாங்கித் தருவதாக வாக்களித்தானே அவனைப்பற்றி உங்களுக்குத் தெரியாது. அவன் குதிரை வியாபாரியா? நல்ல அனுபவம் இதில் உண்டா? ஏற்கனவே, யாருக்காவது இப்படி வாங்கித் தந்திருக்கிறானா? என்று இப்படி எதைப் பற்றியும் சிந்திக்காமல், எடுத்தவுடன் இரண்டாயிரத்தைக் கொடுத்துவிட்டீரே-அவன் திரும்பி வருவான் என்று என்ன நிச்சயம். ஆகவேதான், தங்களிடம் ஆர்வம் இருக்கிறது, அறிவு இல்லையென்று முடிவு செய்து முட்டாள்கள் பட்டியலில் முதல்வராகச் சேர்த்து விட்டேன்."

"குதிரைகளுடன் அவன் திரும்பி வந்துவிட்டால்...?"

"உங்கள் பெயர் இருக்குமிடத்திலே, அவன் பெயரை எழுதிக் கொள்வேன்"

"என்ன அசம்பாவம்!"

"அசம்பாவமல்ல மகாராஜ்—அறிவுடன் சிந்தித்தால் ஏற்படும் முடிவு. ஊர், பெயர், விலாசம் எதுவும் விசாரியாமல் இரண்டாயிரம் எடுத்துத் தந்தீர்கள்—புத்திசாலியாக இருந்தால் என்ன செய்யவேண்டும், எடுத்துக்கொண்டு "கம்பி" நீட்டவேண்டும். முட்டாளாக இருந்தால்தான், திரும்பி வருவான்"

மன்னன் அடுத்த கேள்வி போடவில்லை—போட முடியவில்லை. திருதிருவென விழித்தான்! மந்திரியோ சிரித்தான்.

* * *

"குதிரை ஒப்பந்தம்" மிக வேடிக்கையாக இருக்கிறதல்லவா? இது மன்னராட்சி காலத்தில் நடந்ததாகக் கூறப்படும் கற்பனை. ஆனால் இம்மாதிரி "குதிரை ஒப்பந்தம்" இந்த மக்களாட்சி காலத்திலும் நடக்கிறது. என்ற எண்ணிடும் பொழுது கண்ணீர் வருகிறது!

பூலோக பூபதிகள் காலமா? இது பொதுமக்கள், தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் பொற்காலமல்லவா? இதிலுமா 'முட்டாள் பட்டியில்' முதலிடம் பெறுவது, நாடாளும் 'நல்லவர்கள்'? கூடாது இந்த நிலை என்பதுமட்டுமல்ல, இதுவரை விட்டுவைத்திருந்ததே பொதுமக்களின், தண்டனைக்குரிய தவறு—இதனை மக்கள் உணரவேண்டும்.

இந்திய ஆட்சியாளர், பூலோக பூபதிபோக்கில் ஒரு ஒப்பந்தம் செய்துள்ளனர், அவர்கள் செய்தது "ஜீப்கார் ஒப்பந்தம்" குதிரை ஒப்பந்தம்போல!

தனிப்பட்டவர்கள் ஒப்பந்தம் பேசி, தவறுகள் நிகழ்ந்தால், தவறுவது இயற்கையென்று இருந்து விடலாம்—ஆனால் ஒரு நாட்டின் பெரும் பொறுப்பை ஏற்றுள்ள சர்க்காருக்கு இந்த 'சாக்கு போக்கு' ஒத்தவராது. அவர்கள் தவறக்கூடாது அவர்கள் தவறுவது ஆள்வோருக்கு வேண்டுமானால் வேடிக்கையாக இருக்கலாம். மக்களுக்கு அது உயிரின் வாதை — இதனை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ஜீப்கார்கள் வாங்கட்டும், யாரும் தவறு என்று சொல்ல முடியாது. ஆனால் அவர்கள் வாங்கிய முறையோ, மனதிலே புதைந்து கிடந்தால் துன்பம், சொன்னாலோ துக்கம், கேட்டாலோ வெட்கம்!

இந்திய சர்க்காருக்கு வேண்டிய ஜீப்கார்கள் 2000 — அவைகளை வாங்க ஒப்பந்தம் செய்துகொண்டார்கள் — யாரோடு? ஒரு "அன்னக்காவடி"யோடு!

சிரிக்கிறீர்களா, அழுகிறீர்களா— தெரியவில்லை. இந்த செய்தியைப் படிக்கும், உலகத்தின் பிறநாட்டு மக்கள் நிச்சயமாக சிரிப்பர், கேலி யோடு!

அன்னக்காவடி மட்டுமல்ல, அந்தக் கம்பெனி, ஒரு சூதுச் சரக்கம் —கம்பெனி என்ற பெயரால் ஏமாற்றுவேலை செய்து கொண்டிருந்த தந்திரக்காரர்கள் கூடாரம் அந்தக் கம்பெனி—அதோடு ஒப்பந்தம் செய்துகொண்டவர்களோ, முப்பதுகோடி மக்கள் வாழ்வை தினமும் நிர்ணயிக்கும் கடமையுடைய கனவான்கள்!

எப்படி ஜோடி? சேரக்கூடாத "ஜோடிகள்" சேர்ந்ததால் நடந்த விபரீதத்தைப் பாருங்கள்.

இந்திய சர்க்காருக்கு அந்தக் கம்பெனியைப் பற்றி எதுவும் தெரியாது, பூபதி ராஜாவுக்கு, குதிரை வாங்கித் தருபவனைப்பற்றி எதுவும் தெரியாதது போலவே!

இந்திய சர்க்கார் 80-இலட்சம் ரூபாய் மதிப்புள்ள 2000 கார்களை வாங்க ஒப்பந்தம் செய்துகொண்ட கம்பெனியின் மூலதனம் ரூ. 8000.

முன்பணமாக 'நம்ம சர்க்கார்' அனுப்பிவிட்டதோ 22-இலட்சம்

வந்த கார்களோ, 155-அவை, இவர்கள் எதிர்பார்த்தது போல இல்லை—ஆகவே மற்ற ஜீப்கார்களை வரவழைக்காமல் நிறுத்த முயற்சித்தனர்.

நிறுத்தும் முயற்சி தொடங்குவதற்குள், அக்கம்பெனியே கலைக்கப்பட்டது!!

இந்திய சர்க்காருக்கும், 'முட்டாளில்' முதல்வரென, அவர் மந்திரியாலே முடிவு கூறப்பட்ட பூலோக பூபதி ராஜாவுக்கும் என்ன வித்தியாசம்?

பரிவாங்குவதாக, பணத்தை அள்ளிக் கொடுத்தான், மன்னன். ஆனால் அது கரியாக்கப்பட்டபணம் என்றான் மந்திரி.

ஜீப் கார் வாங்க முயன்ற இந்திய சர்க்கார் அளித்த பணமும் கரியாக்கப்பட்டது என்று இன்று டெல்லியில் சிவராவ் கூறுகிறார்.

இப்படித்தான் முன்னொரு முறை சர்க்கரைக் 'கோளாறு' நடந்தது. அதனை மகாவீர் தியாகி எடுத்துக் காட்டினார். அந்த நஷ்டத்தைப் பற்றி விசாரிக்க ஒரு குழு அமைத்தனர். அதன் பலன் இன்று ஒரு அறிக்கை வந்துள்ளது. அதில் கூறப்பட்டுள்ளவை, நாம்எதிர்பார்த்தவைதான்—புதிதல்ல, எதுவும்!

நஷ்டத்தை எடுத்துக் காட்டியவருக்கு இலாபம்—தியாகி, மந்திரி ஆனார்!

ஆனால் நாட்டின் வருவாயிலே, ஒரு மந்திரியால் செலவு கூடிற்று.

சர்க்கரை நஷ்டத்தைப் பற்றி விசாரிக்க ஏற்பாடு செய்யப்பட்டவர் கங்கா நாத் என்பவர் — அவர் கூறிவிட்டார், சர்க்கரை அதிக விலை கொடுத்து வாங்கப்பட்டது என்னவோ, உண்மை — ஆனால் கொரிய யுத்தத்தால் ஏற்பட்ட அதிகரிப்பை யாரும் எதிர்பார்த்திருக்க முடியாது! ஆகவே, இந்த நஷ்டத்திற்குக் காரணமாக எந்த சர்க்கார் அதிகாரியையும் காட்ட முடியாதென்று!

அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டது—133 இலட்சநஷ்டம்போதாதென்று, இது வேறு அதிக செலவு!

குதிரை தள்ளியது மல்லாமல், குழியும் பறித்ததாம்!

இப்பொழுது, 'ஜீப்கார்' ஒப்பந்தம் பற்றி சிவராவ் கேட்டுள்ளார்.

இதன் விளைவு என்னவாக இருக்கும்?

சிவராவ் மந்திரியாக்கப்படலாம்—ஆனால், இவர் சென்னையைச் சேர்ந்தவர்-வடநாட்டவரல்ல!

அவர், இம்மாதிரி, அந்த 'அற்பாயுசு' கம்பெனியுடன் எகிப்து சர்க்காரும் உடன்படிக்கை செய்து கொண்டு ஏமாந்தது — அதற்குக் காரணமாக இருந்த அரசாங்க பணியாளர்கள்விசாரிக்கப்பட்டனர்என்று குறிப்பிட்டுவிட்டு, அம்மாதிரி இந்திய சர்க்கார் செய்யவில்லை யென்கிறார்.

இந்திய சர்க்கார் ஏன் செய்யப் போகிறார்கள் — இனி சிவராவ்கள் பேசக் கூடாது என்று பார்ப்பார்களே தவிர, 'ஜீப்கார் ஒப்பந்தங்கள்' நடக்காமல் தடுக்கமாட்டார்கள்.

தியாகியை வாய் திறக்காமல் தடுத்துவிட்டார்களே, மந்திரியான பிறகும், வழக்கம் போல் கேள்வி கேட்டபொழுது என்ன சொல்லி தடுத்தார்கள்? அந்த முறை அவர்களுக்குத் தெரியும்!

நஷ்டத்தைப் பற்றி அவர்களுக்கு என்ன? நாட்டின் வரிப்பணந்தானே!

ஏற்பட்ட நஷ்டத்தை, ரூபாயாக எண்ணாமல், அதனை ஏழை எளியவரின் வியர்வைத் துளிகளால், கண்ணீரால், குருதியால் எண்ணினால் அவர்கள் இந்த நஷ்டத்தை ஏற்படுத்திவிட்டு இன்னமும் ஆள்வோராக இருக்கமாட்டார்கள்.

அப்படியே, ஒரு விசாரணைக் கமிட்டி அமைத்தாலும், அதுவும் கங்கா நாத் அறிக்கையாக இருக்குமே ஒழிய, ஏதோ பெரிய மாறுதல் ஒன்றும் ஏற்பட்டுவிடாது!

விலாசம் தெரியாத ஆசாமியிடம், குதிரை வாங்க பணத்தைக் கொடுத்தான் மன்னன்—குறைமதி கொண்டோன் என்றான், மந்திரி.

முன்பின் விசாரிக்காமல் ஒரு கம்பெனியோடு இந்திய சர்க்கார் ஒப்பந்தம் செய்தது—நாம் ஆளத்தெரியாதவர்கள் இவர்கள் என்று கூறுவோம்.

பரி வாங்க பணம் என்று, கரியாக்கப் பட்டது, மன்னனால் — இன்று கார்வாங்க பணம் என்று கரியாக்கப் பட்டது!! இந்திய சர்க்காரால்!

## பதவிபாரம்!

எஸ் ஐ. ஆர்; எம். எஸ். எம் என்று அழைக்கப்படும் ரயில்வேக்களையெல்லாம் ஒன்றாக்கி, தெற்கத்திய ரயில்வே (Southern Railway) என்று ஆக்கியிருக்கிறது, மத்திய சர்க்கார்.

இந்த ஏற்பாடு ரயில்வே மந்திரி பார் கோபாலசாமி அய்யங்காரின், சிரத்தை மிக்க புது முயற்சியாம்.

இந்த 'புதுத் திட்டப்படி' மேற்படி தெற்கத்திய ரயில்வேக்களின் ஜெனரல் மானேஜர் ஆக கே. ஆர். ராமானுஜம் என்பவர் ஆக்கப்பட்டிருக்கிறார்.

இவர், எஸ். ஐ. ஆர். ரயில்வேயின் ஜெனரல் மானேஜராக இருந்தவர்.

இப்போது எம். எஸ். எம். ரயில்வேயின் ஜெனரல் மானேஜர் பொறுப்பும் 'உபரி'யாக இவரிடமே ஒப்படைக்கப்பட்டுவிட்டது.

அதோடு, மைசூர் சமஸ்தான ரயில்வேக்களுக்கும் இந்த ஆசாமியே ஜெனரல் மானேஜராம்.

"இந்த ராமானுஜம், ரயில்வே மந்திரி கோபாலசாமி அய்யங்காருக்குச் சொந்தக்காரராமே. அதற்காகத்தான் இந்தப் புது ஏற்பாடு செய்யப்பட்டு இவ்வளவு 'பதவிபாரம்' தாங்கப்பட்டிருக்கிறதோ?" என்று, ஒருவர் நமக்கு எழுதியுள்ளார்.

நாமென்ன கண்டோம், எல்லாம் பார்த்தாலுமேதான் 'அவர்கள் ராஜ்யமா'க் காட்சி தருகிறதே!



## விருந்திலே—மருந்து

விருந்துக்குப் போன இடத்திலே மருந்து— அதுவும், அதுவரைக்கும் அவர்களை விடாது பிடித்திருந்த நோயையும் விரட்டி, 'திருந்து' என்று கட்டளையிடும் அரிய மருந்து தந்தார். சென்னை மேயர் இராமநாதர்.

அவரை, நாகை திருவெம்பாவை, திருப்பாவை ஆறங்க மாநாட்டிற்குத் தலைமை வகிக்க அழைத்திருந்தனர்.

சென்றார் — 'பாவை' பக்தர்கள் ஏராளம் கூடியிருந்தனர். 'கோவிந்த நாம சங்கீர்த்தன முர்த்தனு, கோவிந்தா, கோவிந்தா' என்று கூவினர்! ஹர ஹர மகாதேவ' என்று ஆரவாரித்தனர்.

மேயர், 'மேல் பூச்சு' பேச்சுப் பேசவில்லை. உண்மையைக் கூறிவிட்டார்.

உள்ளதைச் சொன்னால், கொள்ளைக் கண்ணனுக்கு கோப்பாளமாம்— அதுபோல, மாநாடு கூடியவர்களுக்கு உடம்பெரிச்சல் ஏற்பட்டுத்தானிருக்கும்.

இந்து மதத்திற்கு சிலர் புதிய அர்த்தங்கள் தந்தார்கள்.

ஆகவே, இந்து மதம் வளராமல் தடை செய்யப்பட்டு விட்டது

இந்து சமய வாழ்க்கையை பார்க்கவே மனக்கவலை ஏற்படுகிறது.

மற்ற மதங்கள் உலகத்திலே செல்வாக்கு பெற்றதுபோல, வெளியிலும் இந்து மதம் பரவ இல்லை.

இந்தியாவிலேயும் வலிமையோடில்லை

சமயப் பற்றே அற்று விட்டது

இப்படி, ராமநாதர் அடுக்கடுக்காக உண்மைகளைச் சொன்னார். பக்தர்கள் சோகியாமல இருந்திருப்பரா? அல்லது 'பாவை பாடி கூத்தாடி யிருந்திருப்பரோ-அறியோம்.

அது மட்டுமல்ல, மேயர் மேலும் பேசியுள்ளார், பழையன கழிதலும், புதியன புகுதலும் வழுவல, கால வகையினானே என்று சூத்திரங் காட்டி, புதிய பாதையைக் காட்டியுள்ளார் 'பாவை' மாநாட்டில்

பக்தர்கள் பயந்திருப்பார்கள்— பக்தைகள் பதறிப் போயிருப்பார்கள். திருவெம்பாவைத் திருவாளர், 'சிவ சிவ' என்றிருப்பார், சூடிக் கொடுத்த நாச்சியாரின் பக்தராளுக, 'நாராயண, நாராயண' என்று உச்சரித்திருப்பர்!

என்றாலும் இராமநாதர், நல்ல கருத்துக்களை, நல்ல நேரத்தில, நல்ல இடத்தில் கூறியுள்ளார்.

நல்ல நேரம் இது — ஏனென்று கேட்கிறீர்களா? உலகம் மாறி வருகிறது என்று மேயர் குறிப்பிடுகிறார். அதுவும் விரிவாக அந்த மாறுதலின் தன்மையை எடுத்து விளக்கியுள்ளார்.

இந்தக் காலத்தில் விஞ்ஞானம் வளர்ச்சியும், கால நிலையும் மனித சமூகத்தைப் பலவழிகளில் முற்போக்கு அடையச் செய்துவிட்டன.

உலகம் மிக வேகமாக மாறிக் கொண்டு வருகிறது.

வாழ்க்கையிலும், கொள்கையிலும், அறிவிலும் கல்வியிலும், சமயத்திலும், பண்பிலும், மற்றும் எல்லாத் துறைகளிலும் பெரிய பெரிய மாறுதல்கள் ஏற்பட்டு புதிய ஜன சமூகம் மாறிவிட்டது.

இத்தனையும் சென்னை மேயர் பாவை நாட்டில் தந்த விளக்கம்— ஆனால், அவர் கூறுவதுபோல, மாறிவிட்டதா என்றால், இந்திய காங்கிரஸ் தலைவர் தாண்டன் இல்லையென்கிறார்.

இந்த நூற்றாண்டில், உலக சுபீட்சத்திற்காக யகும் வளர்க்கிறார் தாண்டன் — காங்கிரஸ் கட்சித் தலைவர்.

சுதந்திரம், சோறுண்ணா விரதத்தால் வந்தது என்று பேசுவோர், சமாதானம், யாகத்தால்வரும் என்று கூறுவதிலே தப்பில்லைதான்—ஆனாலும், இராமநாதர் பேச்சு, இந்த 'தாண்டன்' காலத்திற்கு ஏற்றது மட்டுமல்ல, இன்றியமையாததுங்கூட!

நாட்டுத் தலைவர் யாகம் வளர்க்கிறார் அந்தோ!

இவர் மத மாநாட்டிலும் 'மருந்து' தந்துள்ளார். அவர் தைரியத்தைக் காண மகிழ்கிறோம்.

நம்மைவிட காரமாகப் பேசியுள்ளார். ஆனால், நாம் எடுத்துக்காட்டினால் சீறுகிறார்கள்.

அவர் கூறுகிறார் — மத எதிர்ப்பு மாநாட்டிலல்ல—பாவை பாராயணக்காரர் கூடியுள்ள ஆறங்கமாநாட்டில்

இந்நிலையில் இக்காலத்திற்கு உதவாத பழைய சம்பிரதாயங்களை விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருப்பதில் பயனொன்றும் இல்லை. உலக மாறுதல்களுக்கொப்ப ஒத்துப்போகாமல் இருப்போமானால். இப்போது வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் உலகப் புதுவெள்ளம் இந்து மதத்தையும், இந்து சமூகத்தையும் அடியோடு அடித்துக் கொண்டுபோய்விடும் என்று எச்சரிக்கிறார் மேயர்—பக்தி பாசுரம் பாடி, பாமனுளை நாடி, பாவை நெறியோ, அந்தாதி வழியோ தேடி ஓடி, மும்மலம் சாடி, முக்திபெற என்றுகூறவில்லை அவர் — விருந்திலே, மருந்துதான் — வேறொன்றுமில்லை, எம்பாவாய்!

மார்கழித் திங்கள், மதிநிறைந்த நன்னாள் என்றுகூறவில்லை. தேவையுமில்லை. சமாதானயக்ஞம், நடத்துகிறார் தாண்டன் — இந்த மதியிருண்ட நன்னாளில், பொன்கருத்துகள் கூறுவோம் என்று கூறிவைத்தார்போலும்!

எனவே, கோயில்களை, அறநிலையங்களை ஜனசமூகத்திற்கு பயன்படும் முறையில் அமைக்கவேண்டும் என்றார் மேயர்—அதன் விளக்கம் இதுதான்—கோயில்களை மருத்துவமனைகளாக்கவும், கல்விக் கூடங்களாகப் பயன்படுத்தவும், கலைமன்றங்களாக மாற்றவும் வேண்டும்! ஆன்மார்த்தம் மட்டும்போதாது—மக்களின் வாழ்க்கைக்கும் உதவிசெய்யக்கூடிய முறையில் மதத்தை அமைக்கவேண்டும்.

இவ்வளவு கூறிய மேயர், இறுதியில் எனக்கு நல்லதென்று தோன்றிய கருத்துரைகளைக் கூறினேன். நல்லதென்றால் ஏற்றுக்கொள்ளுங்கள் என்று கூறியுள்ளார்.

பிறகு ஏதேதோ, யாரரோ, பேசினார்கள், அதுபற்றிய கவலை நமக்கில்லை. நம்தொண்டு, மதமாநாட்டிலும் மணிமொழிகளைப் பொழியுமளவு நிலைமையை மாற்றியுள்ளதே என்பதைக்காண பெருமகிழ்வு கொள்கிறோம்.

விருந்து தருவார் என்றுவந்திருப்பார்கள். 'வெம்பாவை பாராயணம் செய்யுங்கள், வேற்றுமை நீரும்,

## இரவல் பட்டு! இனும் கோதுமை!!

—

திருவிழாவிற்குச் சென்றுவர' பக்கத்துவீட்டுக்காரியிடம் பட்டுப் புடவை 'இரவல்' கேட்டாளாம் — அவள் பட்டுப் புடவை கொடுத்துவிட்டு, கூடவே கிளம்பினளாம், திருவிழாவிற்கு!

"இப்படிப் போகாதே — பட்டு நலுங்கிவிடும்—கூட்டத்தில் இப்படி இடித்துக்கொண்டால், புடவை என்ன ஆவது" என்ருளாம்.

தூரத்திலே 'இரவல்' புடவைக்காரி உட்கார்ந்தாளாம், 'ஐயோ பட்டுப்புடவை என்னுகிறது, எழுந்திரு எழுந்திரு' என்று கூவினளாம்!

பட்டுப்புடவை இரவல் கொடுத்த மாதிரி — என்று உவமைக் கதை சொல்வதுண்டு, தமிழ்நாட்டில்!

இவளாவது, இரவல் கொடுத்த பிறகு, 'தம்பட்டம்' அடித்தாள், தன்புடவையைக் அவள்கட்டியிருக்கிருள் என்று!

ஆனல், அமெரிக்கா, இதைவிட மோசமாகிவிட்டது.

கோதுமை கேட்ட இந்தியாவிற்கு கோதுமை கொடுத்த பிறகாவது, 'குத்திக் காட்டினுலும் பொருத்தமாக இருக்கும்.

பட்டுப் புடவை கேட்டவளிடம்' "சரி, தருகிறேன் — 'அவரை' ஒரு வார்த்தை கேட்டுவிட்டுத் தந்துவிடுகிறேன். அதற்கு 'எதும்' எனக்கு வேண்டாம். ஆனல், சரியாக கட்டிக் கொள்ளவேண்டும். கூட்டத்திலிடிபட்டு, புடவையை நலுங்கிவிடக்கூடாது, கண்டவிடத்தில் உட்கார்ந்து கறையாக்கிவிடக்கூடாது" என்று பிரசங்கம் செய்தபடியே இருந்து, திருவிழா தீர்ந்தபிறகு அழைத்து "வேண்டுமா பட்டுப்புடவை இரவலாக" என்று கேட்ட பக்கத்துவீட்டுக்காரிபோல அல்லவா அமெரிக்கா பேசியபடி இருக்கிறது!

இரவல் கேட்டது வெட்கம் — தாங்கமுடியவில்லை. அதனைக் கொடுப்பதற்குள் பேசுகிற பேச்சோ நம்மால் சகிக்கமுடியவில்லை.

கோதுமை தருகிருர்களாம் — இனுமாக! அதற்கு தீர்மானம்— — தீர்மானத்தை யொட்டியும், வெட்டியும் பேசுகிருர்கள் பலபேர் — எதையெதைச் சொல்லவேண்டுமோ அத்தனையும் சொல்லிவிட்டார்கள்!

பிச்சைக்காரனைப் பார்த்து, காலணு விட்டெறியும் 'பிரபுவைப்' போல பேசிவிட்டனர். பேசுகிருரே ஒழிய, இன்னமும் 'காலணு'வும் அவர் கையைவிட்டு நகரவில்லை.

அதுபோலவே, கோதுமை வரவில்லை. கொடுப்பதில் தீவிரமாம் — ஜரூராம்—என்ன வெட்கக்கேடு!

இந்தியாவின் மானத்தை இப்படிக்காற்றிலே பறக்க விடுகிருர்கள்— ஆனுலும் அவர்கள்தான் ஆள்பவர்களாக இருக்கிருர்கள். இது முன்னதைவிட பெரும் வெட்கக்கேடல்லவா?

பட்டுப்புடவை இரவல் வாங்கிக் கட்டிக்கொண்டவள், திருவிழாவிலே அவமானப் பட்டதைவிட அதிக அவமானந்தான், இந்தியாவுக்கு!

அதுவும், இந்தியாவுக்கு இரட்டிப்பு அவமானம் — வாங்குவதற்கு முன்பும், பின்பும்! இப்பொழுது முற்பகுதிதான் நடக்கிறது. பிற்பகுதி நடப்பதற்குள் பசிப்பிணியே மறைந்துவிடுமோ என்னவோ!

இப்படி அமெரிக்கா செய்யும் காலங்கடத்தும் ஜாலத்தை விளக்கி 'கல்கி'கூட ஒரு கார்ட்டூன் வரைந்துள்ளது.

பட்டுப்புடவை கேட்டது, திருவிழாவிற்குச் சென்றுவர — திருவிழா தீர்ந்தபிறகு பட்டுப்புடவை தரட்டுமா என்று கேட்பதால் என்ன இலாபம்? அனுவசியமாக, நம்மிடம் பட்டுப்புடவை இல்லையென்பதை ஊருக்கு 'தம்பட்டம்' போட்டதுதானே! அதுபோல அமெரிக்காவும் நடந்துகொள்ளுமோ என்னவோ?

திருவிழா முடியுமுன் தேவை, பட்டு-உணவு நெருக்கடிக்குத்தான் கோதுமை! நமக்குத் தெரிகிறது அவர்களுக்கு இது தெரியவேண்டுமே!

—

திருப்பாவை பாடுங்கள், தீராத பசிப் பிணி பறந்திடும், தேவாரம், நமக்கு ஒரு அரிய பக்தி பாதை— ஆகவே அதில் நடந்து, அப்பன் சிவகாமி நேசன் அருள் தேடுங்கள் — நாலாயிரப் பிரபந்த சமரசம் பாரீர் ஆகவே எல்லோரும் தீட்டுங்கள் திருநாமம்' என்றெல்லாம் பேசுவார் என்று எதிர்பார்த்திருப்பார்கள் — ஏமாந்தார்கள்.

அவரோ மருந்து தந்துள்ளார், நோய் தீர - மருந்து வேலை செய்யட்டும்!

—



Edited Printed & Published by C N. Annadurai M. A at DravidaNadu" Press
95, Tirukkachinambi street Kancheepuram'

